श्री गुरुभ्यो नमः

सद्विषय सङ्ग्रहः - ६

# पूजासङ्ग्रहः

ஸத்விஷய ஸங்க்ரஹம் - 6

# பூஜா ஸங்க்ரஹம்

வெளியிடுவோர்:

**Sri Pratyaksha Charitable Trust (Regd)**

9/21, Balakrishna Road, F-1, Madurams,
Mylapore, Chennai-600 004.
Email:sripratyaksha@rediffmail.com

**2013**

SADVISHAYA SANGRAHAM - 6

**PUJASANGRAHA**

First Edition : 2003
Second Edition : 2003
Third Edition : 2004 Jan.
Fourth Edition : Sanskrit only 2004 Jan.
Fifth Editioin : 2009 Oct.
Sixth Edition : 2011 Feb.

Copies available at :

**Sri Pratyaksha Charitable Trust (Regd.)**
No. 19/21, Balakrishna Road, F-1, Madurams,
Mylapore, Chennai - 600 004
e:mail:sripratyaksha@rediffmail.com

---

Lasertypest & Printed at :
**V.K.N. Enterprises**
164/New 292, R.H. Road, Mylapore, Chennai-600 004
Ph: 9840217036

# விஜ்ஞாபனம்

நமது பாரத பூமி பெண்களுக்குத் தனிச் சிறப்பிடம் தந்துள்ளது. தேசத்தையே மாத்ருபூமி என்றழைக்கிறோம். அப்பெருமையை எண்ணற்ற நூற்றாண்டுகளாகப் பெண்கள் தங்கள் நடைமுறைச் சிறப்பால் மேலும் மதிக்கத் தக்கதாகச் செய்துள்ளனர். நம் நாட்டின் பண்பாட்டை இதுவரை போற்றிக் காப்பாற்றியதில் பெண்களுக்கு மாபெரும் பங்கு உண்டு. அதனை வரும் தலைமுறையினருக்கு அறிமுகப்படுத்துவது இன்றைய பண்பட்ட குடும்பத்தினரின் பெரிதும் முக்யமான கடமை.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் அவர்கள் ஸ்ரீமடத்துப் பணிகளில் பண்பாட்டுப் பாதுகாப்பிற்கு முதலிடம் தந்துள்ளனர். சிறுவர் சிறுமியருக்கு ஆரம்பக் கல்வி பெறும்பொழுதே பாரதப் பண்பாட்டிற்கான நடைமுறைகளைப் போதிப்பதன் அவச்யம்.

ஆரம்ப வித்யாசாலையிலிருந்து கல்லூரிவரை படிக்கின்ற மாணவிகள் ஐம்பதுக்கு மேற்பட்டவர் இங்கு தங்கி ஓய்வு நேரங்களில் பண்பாட்டில் பயிற்சி பெறுகின்றனர். அதி நவீன கம்ப்யூடர் பயிற்சிவரை எல்லா கல்வித் துறைகளிலும் எல்லா மாணவிகளுக்கும் பயிற்சி தரப் பெறுகிறது. ஆலயங்களுக்கு அழைத்துச் சென்று அவற்றின் வரலாறும், பெருமையும் அறிமுகப் படுத்தப்படுவதுடன் எளிய வழிபாட்டு முறையும் கற்றுத் தரப்படுகிறது.

இன்றும், என்றும் பண்பாட்டை முழுவதும் நம்பிக்கையுடன் பின்பற்றுபவர் பெண்களே. வீட்டிலோ, கோவிலிலோ பெண்கள் பண்பாட்டில் கொண்டிருக்கிற நம்பிக்கையும் ஆழ்ந்த பற்றும்தான் குடும்பத்தினரைப் பண்பாட்டில் ஈடுபடுத்துகின்றன. குடும்பத்தினர்

அனைவரும் வ்ரதங்களிலும், பூஜைகளிலும், பண்டிகைகளிலும் எளிதில் ஆர்வத்துடன் ஈடுபடுவதற்கு உதவும் வகையில் ஸத்விஷய ஸங்க்ரஹத்தின் தொடரில் பூஜாஸங்க்ரஹம் வெளியாகிறது.

இதனை எழுதித் தந்து உதவிய ஸ்ரீரங்கம் வைத்ய ஸ்ரீ S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி அவர்களுக்கும், இதனை அழகாக அச்சிட்டுத்தந்த V.K.N. Enterprisesன் V.K. நாராயணன் அவர்களுக்கும் மற்றும் அச்சிட உதவிய சென்னை-85யை சேர்ந்த ஸ்ரீ சாய் சங்கர பப்ளிக் சாரிடபுள் ட்ரஸ்டிக்களுக்கும் எமது மனமார்ந்த நன்றிகள்.

Sri Pratyaksha Charitable Trust (Regd.)
No. 19/21, Balakrishna Road, F-1, Madurams,
Mylapore, Chenani-600 004

*Dedicated With Humble Pranams By -*

**Sri Sai Sankara Public Charitable Trust**

No.2, Anmol Garden, 66/1, Naidu Street
Kottur, Chennai - 600 085.
Phone - 2447 2297.
E-mail : vardhini_r@yahoo.com



hone : (04112)222115
ax : (04112) 224305
ஃ

Sri Chandramouleeswaraya Namaha:

Email : skmkanchi@md3.vsnl.net.in

Sri Sankara Bhaghavadpadacharya Paramparagatha Moolamnaya Sarvagnapeeta

His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi

# Jagadguru Sri Sankaracharya Swamigal

SRIMATAM SAMSTHANAM
No. 1, Salai Street, Kanchipuram - 631 502.

Date : ______

நம் அகண்ட பாரதத்தின் அனாதியான மதத்தை ஸனாதன மதம் என்கிறோம். அதன் பிரசாரம், அனுஷ்டானம் ஆகிய இரண்டு வழிகளும் பின்பற்றப்பட்டு வந்துள்ளதைச் சென்ற நூற்றாண்டின் முற்பகுதிவரை காணமுடிகிறது. அடைந்துள்ள ம்ரேயஸ்ஸும், பொதுஜன யோகக்ஷேமங்களும் குறைவில்லாமல் இருந்துள்ளதே அதற்குச் சாக்ஷி. நடுவில் சில காலம் மத தர்மங்களும், அனுஷ்டானமும் தளர்ந்ததால் இன்னல்கள் இருந்துள்ளதையும் அறிய முடிகிறது. ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதர்கள் பரம்பராகதமான நமது ஸ்ரீமடம் செய்து வரும் ஸநாதனமதத்தின் பிரசார - அனுஷ்டானங்களுக்கான வழிகளில் தர்ம ப்ரசார புஸ்தகங்கள் வெளியிடுவதும், அனுஷ்டானத்தில் சில தர்மங்களையாவது அனுஸரித்து வரும் தனி நபர்களை ஊக்குவிப்பதும் அடங்கும்.

நமது ஸ்ரீமடத்தின் தர்ம பிரசார கார்ய க்ரமங்களில் சிரத்தையுடனும் முழு பொறுப்பேற்று வருபவரும், பிரிய சிஷ்யருமான சிமிழி ராதாகிருஷ்ண சாஸ்திரிகள் பண்டித குலத்தில் ஜனித்ததோடு, ஆசார சீலரும்கூட. பிரம்ம வித்யாரத்னம் ராதாகிருஷ்ண சாஸ்திரிகள், நித்ய - நைமித்திக ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம், ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம், ஸ்ரீ விக்னேச்வர ஸ்துதி மஞ்ஜரீ, தர்ம சாஸ்த்ர ஸங்க்ரஹம், ஸத்விஷய ஸங்க்ரஹம் ஆகிய அரிய நூல்களை எழுதியுள்ளார். அடிப்படையில் வேத சாஸ்த்ராத்யயனங்களை முறைப்படி செய்திருப்பதோடு, ஆயுர்வேதாசார்யராகவும் உள்ளது பாராட்டத்தக்கது.

தற்போது வெளியிட இருக்கும் பூஜாஸங்க்ரஹத்தில் அரிய அடிப்படைக் கருத்துக்களைத் தொகுத்துள்ளார். ஸ்ரீ தேவீ மானஸ பூஜா, லகு பஞ்சாயதன பூஜா, லகு ஸ்ரீ சக்ர பூஜா. குரு பூஜா, ஸ்ரீ சங்கர பகவத் பாத பூஜா, ஸ்ரீ ஸித்தி விநாயக பூஜா, ஸ்ரீ ஸங்கடஹர சதுர்த்தி பூஜா, ஸ்ரீராம நவமீ பூஜா ஆகியவையும் இன்னும் சில பூஜை விதானங்களும் அடங்கியுள்ளன. இவை அனைத்தும் ஸம்ஸ்க்ருதத்திலும், தமிழிலும் தரப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இந்த பூஜாக்ரமம் தொன்று தொட்டுவந்த மரபையொட்டி அங்க பூஜை, நாமாவளி முதலியனவற்றையும் உள்ளடக்கியுள்ளதால் சிறுவர் முதல் பெரியோர்வரை அனுஷ்டிக்க ஹேதுவாக அமைந்துள்ளது. இதனைத் தொகுத்துக் கொடுத்துள்ள ஸ்ரீ சாஸ்திரிகள், தானும் ஸ்ரீ சக்ரபூஜை செய்வதோடு, அம்பாள் உபாஸகர் ஆனபடியால் எவ்வித ஸந்தேஹ விகல்ப விபர்யாஸங்களுக்கும் இடமில்லாமல் தெளிவான பாஷையில் விளக்கங்கள் கொடுத்துள்ளார்.

**இவ்வரிய கைங்கர்யம் செய்துள்ள ஸ்ரீ சாஸ்திரிகளுக்கும் வெளியீட்டாளருக்கும் மனமார்ந்த நன்றிகள்.**

Sri Pratyaksha Charitable Trust (Regd)
F-1, Madurams,
No-19/21, Balakrishna Road,
Mylapore, Chennai-600 004.

நாராயண ஸ்ம்ருதி:

# பொருளடக்கம்

## अष्टोत्तरशतनामावलिः - அஷ்டோத்தர சத நாமாவளி

ॐ

# गुरुवन्दनम्

श्री गुरुभ्यो नमः

गुरवे सर्वलोकानां भिषजे भवरोगिणाम् ।
निधये सर्वविद्यानां दक्षिणामूर्तये नमः ॥

गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुः गुरुर्देवो महेश्वरः ।
गुरुः साक्षात्परं ब्रह्म तस्मै श्री गुरवे नमः ॥

श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम् ।
नमामि भगवत्पाद शङ्करं लोकशङ्करम् ॥

दयमानदीर्घनयना देशिकताऽभीति भव्यदक्षकरा ।
वामकरनिहित दण्डा भाति पुरः सा गुरोमूर्तिः ॥

अपार करुणा सिन्धुं ज्ञानदं शान्तरूपिणम् ।
श्रीचन्द्रशेखरगुरुं प्रणतोऽस्मि मुदाऽन्वहम् ॥

परित्यज्य मौनं वटाधः स्थितिं च
व्रजन्भारतस्य प्रदेशात्प्रदेशम् ।
मधुस्यन्दिवाचा जनान् धर्ममार्गे
नयन् श्रीजयेन्द्रो गुरुर्भाति चित्ते ॥

नमामः शङ्करान्वाख्य विजयेन्द्र सरस्वतीम् ।
श्रीगुरुं शिष्टमार्गानुनेतारं सन्मतिप्रदम् ॥

# குரு வந்தனம்

*ஸ்ரீ குருப்ப்யோ நம:*

குரவே ஸர்வ லோகாநாம் பிஷஜே பவரோகிணாம் ।
நிதயே ஸர்வ வித்யானாம் தக்ஷிணாமூர்த்தயே நம: ॥

குருர் ப்ரஹ்மா குருர் விஷ்ணு: குருர் தேவோ மஹேச்வர: ।
குரு: ஸாக்ஷாத் பரம் ப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥

ச்ருதி ஸ்ம்ருதி புராணாநாம் ஆலயம் கருணாலயம் ।
நமாமி பகவத் பாத சங்கரம் லோக சங்கரம் ॥

தயமான தீர்க்கநயனா தேசிகதா(அ)பீதி பவ்யதக்ஷகரா ।
வாமகரநிஹித தண்டா பாதி புரஸ் ஸா குரோர் மூர்தி: ॥
அபார கருணாஸிந்தும் ஜ்ஞாநதம் ஶாந்த ரூபிணம் ।
ஸ்ரீ சந்த்ர சேகரகுரும் ப்ரணதோ(அ)ஸ்மி முதான்வஹம் ॥

பரித்யஜ்ய மௌனம் வடாத: ஸ்த்திதிம் ச
வ்ரஜன் பாரதஸ்ய ப்ரதேசாத் ப்ரதேசம் ।
மதுஸ்யந்தி வாசா ஜனான் தர்ம மார்கே
நயன் ஸ்ரீ ஜயேந்த்ரோ குருர் பாதி சித்தே ॥

நமாம: சங்கரான்வாக்ய விஜயேந்த்ர ஸரஸ்வதீம் ।
ஸ்ரீகுரும் சிஷ்டமார்கானுநேதாரம் ஸன்மதிப்ரதம் ॥

# स्वस्तिवाचनम् – गुरुवन्दनम्

श्री गुरुभ्यो नमः ॥

श्री महात्रिपुरसुन्दरी समेत श्री चन्द्रमौलीश्वराय नमः ।

श्री काञ्ची कामकोटि पीठाधिपति जगद्गुरु

श्री शङ्कराचार्य श्री चरणयोः प्रणामाः ।

स्वस्ति श्रीमदखिल भूमण्डलालङ्कार त्रयस्त्रिंशत्कोटि देवता सेवित श्री कामाक्षीदेवीसनाथ श्रीमदेकाम्रनाथ श्री महादेवीसनाथ श्रीहस्तिगिरिनाथ साक्षात्कार परमाधिष्ठान सत्यव्रत नामाङ्कित काञ्ची दिव्यक्षेत्रे शारदामठसुस्थितानां अतुलित सुधारस माधुर्य कमलासन कामिनी धम्मिल्ल सम्फुल्ल मल्लिका मालिका निष्यन्दमकरन्दझरी सौवस्तिक वाङ्निगुम्भ विजृम्भणानन्द तुन्दिलित मनीषिमण्डलानां अनवरत अद्वैत विद्याविनोदरसिकानां निरन्तरालङ्कृतीकृत शान्ति दान्तिभूम्नां सकल भुवनचक्रप्रतिष्ठापक श्रीचक्रप्रतिष्ठा विख्यात यशोऽलङ्कृतानां निखिल पाषण्ड षण्ड कण्टकोद्घाटनेन विशदीकृत वेदवेदान्तमार्ग षण्मतप्रतिष्ठापकाचार्याणां श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य श्रीजगद्गुरु श्रीमच्छङ्कर भगवत्पादाचार्याणां अधिष्ठाने सिंहासनाभिषिक्त श्रीमत् **चन्द्रशेखरेन्द्रसरस्वती** संयमीन्द्राणां अन्तेवासिवर्य श्रीमत् **जयेन्द्र सरस्वती** श्रीपादानां तदन्तेवासिवर्य श्रीमत् **शङ्करविजयेन्द्र सरस्वती** श्री पादानां च चरणनलिनयोः सप्रश्रयं साञ्जलिबन्धं च नमस्कुर्मः ॥

# ஸ்வஸ்திவாசனம் - குருவந்தனம்

ஸ்ரீ குருப்ப்யோ நம:

ஸ்ரீ மஹாத்ரிபுர ஸுந்தரீ ஸமேத ஸ்ரீ சந்த்ரமௌளீஸ்வராய நம:
ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத் குரு
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ சரணயோ: ப்ரணாமா:

ஸ்வஸ்தி ஸ்ரீமதகில பூமண்டலாலங்கார - த்ரயஸ்த்ரிம் சத்கோடி தேவதா ஸேவித - ஸ்ரீ காமாக்ஷீ தேவீ ஸநாத - - ஸ்ரீமதே காம்ரநாத - ஸ்ரீ மஹாதேவீ ஸநாத - ஸ்ரீ ஹஸ்தி கிரிநாத - ஸாக்ஷாத்கார பரமாதிஷ்ட்டான - ஸத்யவ்ரத நாமாங்கித - காஞ்சீ திவ்ய க்ஷேத்ரே - சாரதாமடஸுஸ்த்திதாநாம் அதுலிதஸுதாரஸ- மாதுர்ய கமலாஸன காமினீ தம்மில்லஸம்ப்புல்ல - மல்லிகாமாலிகா நிஷ்யந்த மகரந்தஜ்ஜரீ - ஸௌவஸ்திக வாங்நிகும்ப்ப - விஜ்ரும்ப்பணாநந்த - துந்திலித மனீஷி மண்டலானாம் - அனவரதாத்வைத - வித்யாவினோத ரஸிகானாம் நிரந்தராலங்க்ருதீக்ருத சாந்தி தாந்தி பூம்னாம் ஸகல புவனசக்ர ப்ரதிஷ்ட்டாபக ஸ்ரீ சக்ர ப்ரதிஷ்ட்டா விக்க்யாத யசோலங்க்ருதானாம் நிகில பாஷண்டஷண்ட கண்டகோத்க்காடநேந விசதீக்ருத வேத வேதாந்த மார்க ஷண்மத ப்ரதிஷ்ட்டாபகாசார்யாணாம் - ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய வர்ய ஸ்ரீ ஜகத் குரு ஸ்ரீமச்சங்கர பகவத் பாதாசார்யாணாம் அதிஷ்ட்டானே ஸிம்ஹாஸனாபிஷிக்த ஸ்ரீமத் சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸம்யமீந்த்ராணாம் அந்தேவாஸிவர்ய ஸ்ரீமத் ஜயேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதாநாம் ததந்தேவாஸிவர்ய ஸ்ரீமத் சங்கர விஜயேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதாநாம் ச சரணநளினயோ: ஸப்ரச்ரயம் ஸாஞ்ஜலிபந்த்தம் ச நமஸ்குர்ம: ।

## श्री महात्रिपुरसुन्दरी समेत श्री चन्द्रमौलीश्वर पूजावसाने
## श्री गुरु - देव-देवी वन्दनम्

नमः शिवाभ्यां नवयौवनाभ्यां परस्पराश्लिष्टवपुर्धराभ्याम् ।
नगेन्द्रकन्यावृषकेतनाभ्यां नमो नमः शङ्करपार्वतीभ्याम् ॥

कारणपरचिद्रूपा काञ्चीपुरसीम्नि कामपीठगता ।
काचन विहरति करुणा काश्मीरस्तबककोमलाङ्गलता ॥

कञ्चन काञ्चीनिलयं करधृतकोदण्डबाण सृणिपाशम् ।
कठिनस्तनभरनम्रं कैवल्यानन्द कन्दमवलम्बे ॥

ऐश्वर्यमिन्दुमौलेः ऐकात्म्य प्रकृति काञ्चिमध्यगतम् ।
ऐन्दवकिशोरशेखरं ऐदम्पर्यं चकास्ति निगमानाम् ॥

लीये पुरहरजाये माये तव तरुणपल्लवच्छाये ।
चरणे चन्द्राभरणे काञ्चीशरणे नतार्तिसंहरणे ॥

कामपरिपन्थिकामिनि कामेश्वरि कामपीठमध्यगते ।
कामदुघा भव कमले कामकले कामकोटि कामाक्षि ॥

समर विजयकोटी साधकानन्दधाटी मृदुगुणपरिपेटी मुख्यकादम्ब वाटी ।
मुनिनुतपरिपाटी मोहिताजाण्डकोटी परमशिववधूटी पातु मां कामकोटी ॥

जय जय जगदम्ब शिवे जय जय कामाक्षि जय जयाद्रिसुते ।
जय जय महेशदयिते जय जय चिद्गगनकौमुदीधारे ॥

महात्रिपुरसुन्दरी रमण-चन्द्रमौलीश्वर-
प्रसाद परिलब्ध-वाङ्मय-विभूषिताशान्तरम् ।
निरन्तरमुपास्महे निरुपमात्मविद्यानदी
नदीनद पति प्रभं मनसि शङ्करार्यं गुरुम् ॥

## *ஸ்ரீ மஹாத்ரிபுரஸுந்தரீ ஸமேத ஸ்ரீ சந்த்ர மௌளீச்வர பூஜைக்குப் பின் வந்தன ச்லோகங்கள்*

நம: சிவாப்ப்யாம் நவயௌவனாப்ப்யாம்
பரஸ்பராச்லிஷ்ட வபுர்த்தராப்ப்யாம் ।
நகேந்த்ர கன்யா வ்ருஷ கேதனாப்ப்யாம்
நமோ நம: சங்கர பார்வதீப்ப்யாம் ॥

காரணபரசித்ரூபா காஞ்சீபுரஸீம்நி காமபீடகதா ।
காசந விஹரதி கருணா காச்மீர ஸ்தபக கோமலாங்கலதா ॥

கஞ்சந காஞ்சீ நிலயம் கரத்த்ருத கோதண்டபாண ஸ்ருணிபாசம் ।
கடிந ஸ்தனபரநம்ரம் கைவல்யாநந்த கந்த மவலம்பே ॥

ஐச்வர்ய மிந்துமௌலே: ஐகாத்ம்ய ப்ரக்ருதி காஞ்சிமத்த்யகதம் ।
ஐந்தவகிசோரசேகரம் ஐதம்பர்யம் சகாஸ்தி நிகமாநாம் ॥

காமபரிபந்த்தி காமிநி காமேச்வரி காமபீடமத்த்யகதே ।
காமதுகா பவ கமலே காமகலே காமகோடி காமாக்ஷி ॥

லீயே புரஹர ஜாயே மாயே தவ தருண பல்லவச்சாயே ।
சரணே சந்த்ராபரணே காஞ்சீ சரணே நதார்திஸம்ஹரணே ॥

ஜய ஜய ஜகதம்ப சிவே ஜய ஜய காமாக்ஷி ஜய ஜயாத்ரிஸுதே ।
ஜய ஜய மஹேசதயிதே ஜய ஜய சித்ககந கௌமுதீதாரே ॥

ஸமரவிஜயகோடீ ஸாதகானந்த தாடீ
ம்ருதுகுணபரிபேடீ முக்யகாதம்ப வாடீ ।
முனிநுத பரிபாடீ மோஹிதாஜாண்ட கோடீ
பரமசிவ வதூடீ பாது மாம் காமகோடீ ॥

மஹாத்ரிபுரஸுந்தரீரமண சந்த்ர மௌளீச்வர
ப்ரஸாத பரிலப்த்த வாங்மய விபூஷிதாசாந்தரம் ।
நிரந்தரமுபாஸ்மஹே நிருபமாத்மவித்யா நதீ
நதீ நதபதிப்ரபம் மனஸி சங்கரார்யம் குரும் ॥

ஜய விஜயீபவ ॥

॥ श्रीः ॥

# ॥ तोटकाष्टकम् ॥

विदिताखिल शास्त्र सुधा जलधे महितोपनिषत्कथितार्थनिधे ।
हृदये कलये विमलं चरणं भव शंकर मे शरणम् ॥ १ ॥

करुणावरुणालय पालय मां भवसागरदुःखविदूनहृदम् ।
रचयाखिलदर्शनतत्त्वविदं भव शंकर देशिक मे शरणम् ॥ २ ॥

भवता जनता सुहिता भविता निजबोधविचारणचारुमते ।
कलयेश्वरजीवविवेकविदं भव शंकर देशिक मे शरणम् ॥ ३ ॥

भव एव भवानिति मे नितरां समजायत चेतसि कौतुकिता ।
मम वारय मोहमहाजलधिं भव शंकर देशिक मे शरणम् ॥ ४ ॥

सुकृतेऽधिकृते बहुधा भवतो भविता समदर्शनलालसता ।
अतिदीनमिमं परिपालय मां भव शंकर देशिक मे शरणम् ॥ ५ ॥

जगतीमवितुं कलिताकृतयो विचरन्ति महामहसश्छलतः ।
अहिमांशुरिवात्र विभासि गुरो भव शंकर देशिक मे शरणम् ॥ ६ ॥

गुरुपुङ्गव पुङ्गवकेतन ते समतामयतां नहि कोऽपि सुधीः ।
शरणागतवत्सल तत्त्वनिधे भव शंकर देशिक मे शरणम् ॥ ७ ॥

विदिता न मया विशदैककला न च किंचन काञ्चनमस्ति गुरो ।
द्रुतमेव विधेहि कृपां सहजां भव शंकर देशिक मे शरणम् ॥ ८ ॥

॥ तोटकाष्टकम् संपूर्णम् ॥

# தோடகாஷ்டகம்

விதிதாகில சாஸ்த்ர ஸுதா ஜலதே
மஹிதோபநிஷத் கதிதார்த்த நிதே ।
ஹ்ருதயே கலயே விமலம் சரணம்
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 1
கருணா வருணாலய பாலய மாம்
பவ ஸாகரதுঃக்கவிதூனஹ்ருதம் ।
ரசயாகில தர்சந த்தவ விதம்
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 2
பவதா ஜநதா ஸுஹிதா பவிதா
நிஜபோத விசாரண சாரு மதே ।
கலயேச்வர ஜீவ விவேக விதம்
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 3
பவ ஏவ பவாநிதி மே நிதராம்
ஸமஜாயத சேதஸி கௌதுகிதா ।
மம வாரய மோஹமஹா ஜலதிம்
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 4
ஸுக்ருதேऽதிக்ருதே பஹுதா பவதோ
பவிதா ஸமதர்சன லாலஸதா ।
அதிதீன மிமம் பரிபாலய மாம்
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 5
ஜகதீம் அவிதும் கலிதாக் ருதயோ
விசரந்தி மஹாமஹஸச் ச்சலதঃ ।
அஹிமாம்சுரிவாத்ர விபாஸி குரோ
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 6
குரு புங்கவ புங்கவ கேதன தே
ஸமதாமயதாம் நஹி கோऽபி ஸுதீঃ ।
சரணாகத வத்ஸல தத்வநிதே
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 7।
விதிதா ந மயா விசதைக கலா
ந ச கிஞ்சந காஞ்சநமஸ்தி குரோ ।
த்ருதமேவ விதேஹி க்ருபாம் ஸஹஜாம்
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 8

# श्री चन्द्रशेखरेन्द्रसरस्वतीस्तुतिः

चन्द्र आह्लादको दीनशरण्यश्चन्द्रशेखरः।
ईशिता स्वमहिम्नेन्द्रः सर्वशुक्ला सरस्वती।
त इमे सङ्गता यत्र प्रसन्नाः भक्तकोटिषु।
तं वन्दे देशिकं चन्द्रशेखरेन्द्रसरस्वतीम्॥ १॥

कश्चिन्महान्कुले, स्वीये देशे स्यात्कर्हिचित्कचित्।
देशकालातिगो भाति गुरुर्धाम्ना महत्तमः॥ २॥

अन्तः शाक्तः सदा ध्यायन् देवीं त्रिपुरसुन्दरीम्।
भस्मरुद्राक्षबिल्वस्रग्धरः शैवाग्रणीरयम्।
प्रणतान् श्रेयसा युंक्ते सदा नारायणं गृणन्।
परमात्मनि लीनोऽसौ राजतेऽपूर्वशङ्करः॥ ३॥

दुष्कृतं विस्मरत्याशु जानाति सुकृतं परैः।
शंसेत् कृतज्ञः सुकृतं सभायां प्रकटं मुदा॥ ४॥

कोपः क्षणिको ह्यस्मिन् शेते हृदि नैव वासनात्वेन।
क्षमया शमसंपन्नः शिवचिन्तनया दिवारात्रम्॥ ५॥

आपाततः कटून्यपि हितवचनान्यस्य भेषजानीव।
दुर्भावनाव्यपोहात् यावज्जीवं सुधायन्ते॥ ६॥

भक्तो देव्याः, रक्तः सुजनाश्रये, भवे विरक्तश्च।
सक्तः सत्पथचरणे, व्यक्तः काञ्च्यां जगन्नेतुम्॥ ७॥

हृद्यन्तःस्था देवी यमयति चित्तं यथाऽनुकुर्वन्तः।
चरणे भ्रान्तिविहीनाः गुरवः सुपथे नयन्त्यस्मान्॥ ८॥

वाणी प्रसादमधुरा, हृदयं सदयं, सुधामयी वीक्षा।
हस्तौ वितरणचतुरौ प्रणमद्धितचिन्तकस्य गुरोः॥ ९॥

महसाऽमी कामाक्षी वाचा वाणी च, शङ्करः ख्यात्या।
वपुषा लोकानवितुं दधते मूर्तित्रयीमधुना॥ १० ॥

हिरण्मयीं पुष्पवृष्टिं कृतां शिष्यैः स्वमूर्धनि।
पश्यन्नसक्तः साक्षीव तनोत्यञ्जलिनाऽऽशिषः॥ ११ ॥

तव तत्त्वं न जानामि तदमेयं धिया मम।
अनीदृशस्त्वं प्रथितस्तादृशे ते गुरो नमः॥ १२ ॥

नाम्ना धाम्ना शङ्करार्यो भूम्ना विश्वस्य देशिकः।
महिम्ना स्वेन शान्तोऽयं पाति नश्चन्द्रशेखरः॥ १३ ॥

दयमानदीर्घनयना देशिकताऽभीति भव्यदक्षकरा।
वामकरनिहितदण्डा भाति पुरः सा गुरोर्मूर्तिः॥ १४ ॥

वर्षिष्ठो वपुषा, प्रेम्णा यविष्ठो दयया लघुः।
गुरुर्लोकहितासक्त्या विचित्राचरितो गुरुः॥ १५ ॥

तैलबिन्दुर्जल इव यस्य धीर्विश्वगाहिनी।
विवित्सया तलगता स चोदयति नो धियः॥ १६ ॥

वदनं प्रसादसदनं, सदयं हृदयं, सुधामुचो वाचः।
करणं परोपकरणं येषां, केषां न ते वन्द्याः॥ १७ ॥

---

திருநாள் - நீராடும் நாள்:—

*வைகாசி, ஐப்பசி, கார்த்திகை, மாசி இம்மாதங்களில் சூரியோதயத்திற்கு முன்னரே ஆறுகளிலும் குளங்களிலும் நீராடி இறைவனை வழிபட்டு வருவர். வைசாகஸ்நாநம், துலாஸ்நாநம், கிருத்திகாஸ்நாநம், மாகஸ்நாநம் என்று புகழ்பெற்றது. மாதம் முழுவதும் ஒவ்வொருநாளும் விடாமல் நீராடுவர்.*

# வழிபாடு—பூஜை

மனித வாழ்க்கைக்குப் பல வகைகளில் பலர் உதவுகின்றனர். இவர்களை நன்றியும் நன் மதிப்பும் கொண்டு நினைவில் கொள்வது கடமை.

(1) மனிதர்களாக, தாய், தந்தை, ஆசிரியர், தாத்தா, மாமா, அத்தை, ஸஹோதரர், நண்பர் என்று எண்ணற்றவர் உதவு கின்றனர்.

(2) தாயும் தந்தையும் அவர்களது முன்னோர்களும், மறைந்த பின்னரும் பித்ருக்களாக தெய்வமாக நல் வாழ்க்கை பெற வாழ்த்தி உதவுகின்றனர்.

(3) அக்னியும் வாயுவும் சூரியனும் சந்திரனும் நட்சத்திரங்களும் தெய்வீக அதிகாரிகளாக, அதி தைவ நிலையில் உதவுகின்றனர்.

(4) அறியாப் பருவம் நீடித்து அறிவிலியாக வாழாமல், அறிஞர்களாக வாழும் பொருட்டு, அறிவு நூல்களை நமக்குத் தந்தவரும் நம் நன்மதிப்பிற்கு உகந்தவரே. பண்டைய வஸிஷ்டர் வ்யாஸர் வால்மீகி கபிலர் நாரதர் முதலான எண்ணற்ற ருஷிகளிலிருந்து இன்றைய ஆசிரியர் வரை நம் அறிவுக்கு உதவியவர் எண்ணற்றவர்.

(5) எந்த மனிதனும் வேறொருவரைச் சாராமல் தனித்து வாழ இயலாது. துணி நெய்பவர், வீடு கட்டுபவர், செருப்பு தைப்பவர், கால்நடை பராமரிப்பவர், பண்டங்களைச் சேமித்துத் தேவைக்கு ஏற்பக் கிரயம் பெற்று வழங்குகிற வணிகர் என எண்ணற்றவர்.

(6) பசுவும் ஆடும் எருதும் குதிரையும் ஏனையதும் நமக்கு உதவுகின்றன.

இவர்களுக்கு இவரது சேவைக்காகத் தக்க ஊதியம் அல்லது மாற்றுதவி செய்திருந்தாலும் அவர்களது

நன்மனத்திற்கு ஈடான தொன்றும் தர இயலாது. இவர்களை நன்றியும் நன் மதிப்பும் கொண்டு நினைவு கூர்வது மனிதனது இன்றியமையாத கடமை.

இவர்களில் தெய்வம், பித்ருக்கள், ருஷிகள் இவர்கள் உதவியதற்கு ஈடாக எதனையும் செய்ய இயலாதென்பதே பெரியோர்களின் கருத்து. அதனால் மனிதன் பிறக்கும் போதே இம்மூவருக்கும் கடனாளியாக இருக்கிறான் என்பர். தேவருணம், பித்ரு ருணம், ருஷி ருணம் என்று இந்தக் கடன்களைக் குறிப்பிடுவர். இக்கடன்களிலிருந்து மீள்வதற்கு அவர்களைத் தினமும் வழிபடுவதே வழி. தெய்வ வழிபாடு, தாய் தந்தையரைத் தெய்வமாக மதித்து வழிபாடு, குரு வழிபாடு என்ற மூன்றும் கடன் நீங்க வழிகள். இவை தினமும் செய்யத் தக்கவை. உருயிருள்ள வரை, செய்யத் தக்கவை. இவை நித்ய கருமங்கள். அன்றாடச் சடங்குகள் என்ற கடமைகள்.

காலையிலும், மாலையிலும் சூரியனை வழிபடுவது. இரவில் சந்த்ரனை வழிபடுவது, தீபம் அல்லது வேள்வித் தீயில் அக்னியை வழிபடுவது, எந்த நீர் நிலயத்திலும் கங்கை முதலிய புண்ய நதி வடிவிலுள்ள ஜல தேவதை இருப்பதாகக் கருதி வணங்குதல், தாய், தந்தை, ஆசிரியர், முதலானவரிடத்தில் தெய்வீக அருள் பரவி நிற்பதை உணர்ந்து வணக்கமும் அடக்கமும் துலங்க மதித்து நடத்தல், பூமியையும், பசுவையும், ஏனையதையும் அன்னையாகக் கண்டு வணங்குதல் முதலியன இக்கடமைகளில் அடங்கும். இவர்களைத் தன்னைக் காட்டிலும் சிறந்தவர்கள் என்று உள்ளார்ந்த பக்தியுடன் மதித்து, அவர்களது வழியைப் பின் பற்றுவதே வழிபாடாகும்.

## விரதமும் பண்டிகையும்

உடலும் உள்ளமும் கட்டுப்பட்டு வாழ்வின் மேன்மைக்கும் நலனுக்கும் பயன்படுமாறு விரதமும் பண்டிகையும் அமைந்துள்ளன. உடலும் உள்ளமும் தூய்மை பெறவும், மன உறுதி வலிவு பெறவும் இறைவனிடம்

பக்தியுடன் அணுகவும், செய்யும் பணிகளில் சிரத்தை தீவிர மடையவும் விரதம் அதிகம் உதவுகிறது. விரதத்தில் கட்டுப்பாடு அதிகம். பண்டிகையில் கட்டுப்பாடு சிறிது குறையும். கொண்டாட்டம் அதிகம். விரதம் தனி மனிதனின் ஈடுபாட்டை எதிர்பார்க்கிறது. மற்ற குடும்பத்தினர் அவருக்கு உதவுவர். பண்டிகையில் குடும்பத்தினரும் சுற்றமும் கலந்து கொள்வர். விரதமேற்க வயதும் தகுதியும் கால வரம்பும் முக்கியம். பண்டிகையில் பாலரும் முதியவரும் ஆணும் பெண்ணும் ஈடுபட முடியும்.

**விரதம்** — இது இரண்டு விதம். காமியம் நித்யமென. தனித்த விருப்பத்தைப் பெறச் செய்வது **காமியம்**. தனிக் குறிக்கோளின்றி வாழ்நாள் முழுவதுமோ குறிப்பிட்ட காலவரை மட்டுமோ கொள்வது **நித்யம்**. பதிவ்ரதம், ப்ரம்ஹசரிய விரதம் போன்றவை காலத்தையோ, தேசத்தையோ ஒட்டி அமையாது. மணமானவரே பதிவிரதமும் ஏக பத்னீ விரதமும் இருக்க முடியும் மணமாகாதவரே ப்ரம்ஹசரிய விரதம் இருக்கலாம். அஹிம்ஸா வ்ரதமும் ஸத்ய வ்ரதமும் எவரும் இருக்கலாம். குறிப்பிட்ட காலவரை இவற்றிற்குக் கிடையாது. ருஷி பஞ்சமீ விரதம் மணமான பெண்கள் மாத விடாய் நின்ற பிறகு மட்டுமே செய்ய முடியும். வர லக்ஷ்மீ விரதம் குலவழக்காகச் செய்பவர்களே கொண்டாடுகிறார்கள். ஸோமவார விரதம் சனிவார விரதம் ஏகாதசீ விரதம் முதலியதை எவரும் வாழ்நாள் முழுவதும் கொள்ளலாம். தகுதியும் காலவரையும் கருத்தில் கொள்வது இதில் அவசியமாகிறது.

விரதம் கொண்டாடப்படுவதில்லை. நியமத்துடன் தொடர்ந்து அனுஷ்டிக்கத்தக்கவை. விரதங்கள் பெரும்பாலும் மழை நாட்களில் வருகின்றன. பண்டிகைகள் ஒவ்வொரு மாதமும் வரும். விரதத்தை நமக்கு அறிமுகப்படுத்துவதற் கென்றே புராணக் கதைகள் உண்டு. விரதங்களைத் தொடங்கு முன்னரோ நடுவிலோ அந்தக் கதைகளைக் கேட்பதும் விரதச் சடங்குகளில் அடங்கும். தவறான வழியில் செல்லாதிருக்கவும் உடல் நலமும் வாழ்வின் செழிப்பும் பெறவும், உற்றாரும்

சுற்றமும் அனுகூலமாக இருக்கவும் வாழ்க்கை மேம்படவும், குற்றங் குறைகள் நேர்வதை இறைவன் பொறுத்து மன்னித்துப் பாபச் சுமை நீங்க அருள் புரியவும், விரதங்கள் உதவுகின்றன.

உடலும் உள்ளமும் தூய்மையுடனிருக்க, உபவாஸம், கண் விழிப்பு, இறைவனின் வழிபாடு, பஜனம், தெய்வீகச் சூழ்நிலையில் ஆர்வமும் சிரத்தையும் நம்பிக்கையும் கட்டுப்பாடும் கடைபிடித்து நல்ல சிந்தனையுடன் பொழுதைக் கழிப்பது இவையே முக்கியம். ஒரு விரதத்தை ஏற்ற பிறகு எக்காரணத்தைக் கொண்டும் அதிலிருந்து வழுவக் கூடாது.

உபவாஸம் விரதத்தில் முக்கிய இடம் பெறுகிறது. விரத தினத்திற்கு முன்னுள் பகல் உணவு மட்டும் ஏற்று இரவு உணவேற்காதிருந்து, விரத நாளில் முழுவதும் உணவேற்காமல் மறுநாள் காலை விரதம் முடித்தபின் தூய உணவேற்பதே உபவாஸம்.

ஸங்கல்பம் எனும் நோக்கம் நம் மனத்தை விட்டகலா திருக்க, சுறுசுறுப்பின்மை சோம்பல், மனம் சலித்துச் சிதறுவது போன்றவை இடம் பெருதிருக்க உபவாஸம் உதவும். உடல் நிலையும் மன நிலையும் இந்த சுத்த உபவாஸத்திற்கு ஏற்றதாகும் வரை, அடிக்கடி நீர் பருகுதல், உடல் நலனுக்கேற்ற பழங்களைச் சாப்பிடுதல் (பலாஹாரம்) பால் பருகுதல், சர்க்கரை வள்ளி போன்ற கிழங்குகளை வேக வைத்துச் சாப்பிடுதல், அரிசி அல்லது கோதுமையை வறுத்தரைத்த சத்துமா, அரிசி அல்லது கோதுமை வறுத்துச் சமைத்த கஞ்சி வடிக்காத அன்னம். இவ்வாறு அன்னம் வடித்து அடுப்பிலிருந்து இறக்கிய பின் உப்பு, மிளகு , சீரகம், மோர், பால் சேர்த்தது என்றவாறு உபவாஸக் குறிக்கோளுக்கு விரோத மின்றி, உடற்கூறு உபவாஸத்திற்கு ஏற்றதாகும் வரை அரை வயிறு நிரம்பும் வரை ஏதேனும் உணவு ஏற்பதும் உபவாஸத்தின் சில முறைகள். உயிர் தரிக்குமளவிற்கு உணவு, நாக்கிற்கும் வயிறு நிரம்புவதற்கு மல்ல என்று சில சலுகைகளைப் புதிதாகப் பழகுபவருக்கு வழங்குவர். மெள்ள மெள்ளப் பூர்ண உபவாஸத்திற்கு ஏற்றவனுவதில் கருத்து இருக்க வேண்டும்.

கணவன் ஏற்ற விரதத்தில் மனைவிக்குப் பங்கு உண்டு. மனைவி மட்டும் புரிய வேண்டிய விரதங்களில் கணவன் உதவுவான். விரத நாளில் மாத விலக்கு நேர்ந்தால், பெண் தன்னளவில் உபவாஸம் முதலியவற்றை வழக்கம் போல் கடைபிடிக்க வேண்டும். பூஜை முதலியவற்றைச் செய்வதில்லை. நோய் முதலியவற்றால் இயலாமையிருந்தால் அவருக்காக மற்றவர் செய்யலாம்.

உபவாஸ தினங்களில் இட்டிலி தோசை போன்று ஓரிருநாள் முன்னரே ஊரவைத்த தானியங்களின் மாவாலானதும் வயிற்றில் கனத்து ஜீர்ணிக்கத் தாமத மாவதும், ருசி மிக்க துணைப் பொருள் கொண்டதுமானதைத் தவிர்க்க வேண்டும்.

வீட்டிலுள்ள குலதெய்வத்திற்கும் இஷ்ட தெய்வத்திற்கும் மாறுபட்டதாக விரத தேவதை அமைந்தால் கலசத்திலோ, தீபத்திலோ மஞ்சளிலோ, அந்தந்த விரதத்திற்கேற்ப தெய்வ உருவைத் தயாரித்து வழிபடுவர். இவை அனைத்திலும் அவரவர் குலஸம்ப்ரதாயத்தை அனுசரிப்பது அவசியம்.

விரத காலத்தில் ஆசௌசம் நேர்ந்தால், சுத்தி பெற்ற பிறகு திங்கள், புதன், வியாழன், வெள்ளிக்கிழமைகளிலும் தன் நட்சத்திரத்திற்கு 2–4–6–8 நட்சத்திரங்களிலும், அசுவதி, மிருக சீர்ஷம், பூசம், ஹஸ்தம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, அனுஷம், ரேவதி என்ற சுப நட்சத்திரம் கூடிய நன்னாளிலும் செய்யலாம்.

பண்டிகைகளையும் விரதத்திற்கான நியமங்களுடன் செய்யலாம். குடும்பத்தலைவர் நியமத்துடனிருப்பதும், மற்றவர் முடிந்தவரை நியமத்துடன் கொண்டாட்டத்தில் ஆர்வத்துடனும் இருக்கலாம். இவை பலனை எதிர்பார்த்துச் செய்யப்படின் நியமங்களை முழுவதும் பின்பற்றுவது அவசியம். தனித்த விருப்பம் எதுவுமில்லாவிடில் சிறிது நியமம் குன்றினாலும் சிரத்தையும், பக்தியும் குன்றாமல் செய்வது நல்லது.

வருஷப் பிறப்பு, ஆடிப் பண்டிகை, பொங்கல் முதலியவை பண்டிகைகளாகக் கொண்டாடப் பெற்றாலும் அத்தினங்களில், சைத்ர விஷு, கடக ஸங்க்ரமணம் எனும் தக்ஷிணாயன புண்ய காலம், மகர ஸங்க்ரமணம் எனும் உத்தராயண புண்ய காலம் என பித்ரு தர்பணம் செய்ய வேண்டிய நாளானதால் தூய்மையிலும் நியமத்திலும் கட்டுப்பட வேண்டி வரும். தீபாவளிப் பண்டிகையன்று அமாவாஸ்யையும் நேருமாதலால் அதுவும் தர்ப்பண தினமே. பண்டிகையின் கொண்டாட்டத்தை பித்ரு தினத்தின் நியமம் அடக்கிவிடும்.

அமாவாஸ்யை, மாதப் பிறப்பு, மஹாளய பக்ஷம், முன்னோர் மறைந்த திதி இவற்றில் மறைந்த பெற்றோர், தந்தையின் பெற்றோர், பாட்டனின் பெற்றோர் என்ற மூன்று தலைமுறைகளுக்கும் தாயின் பெற்றோர், தாயின் பாட்டனார் பாட்டி அந்த பாட்டனாரின் பெற்றோர் என்ற மூன்று, தலைமுறைகளையும் தர்பணத்தின் மூலம் திருப்தி பெறச் செய்வர். மஹாளய பக்ஷத்தில் தாயின் குடும்பத்தையும் தந்தையின் குடும்பத்தையும் சார்ந்து மறைந்த மாமா சித்தப்பா, ஸஹோதரர், ஸஹோதரி, மாமனார் மாமியார் இவர்களுக்கும் தர்பண முண்டு. இவர்கள் அனைவரின் கோத்திரமும் நாம கரணத்தின் போது வைக்கப்பட்ட பெயரும் அறிந்திருப்பது அவசியம். அன்றாட வழக்கிலுள்ள பெயர் நாமகரணப் பெயரிலிருந்து மாறுபட்டால் அதனால் பயனில்லை.

இப்பணிகளில் தூய்மை மிகவும் முக்யம். நீராடிக் கைகால்கள் அலம்பி ஆசமனத்தால் வாயையும் உள்ளத்தையும் தூயதாக்கிய பின்னரே இவற்றைச் செய்ய வேண்டும்.

சுயக் கட்டுப்பாடு வாழ்வை மேம்படுத்தும். அதன் பயிற்சிக்களமாக இந்த விரதமும் பண்டிகையம் வழிபாடும் அமைகின்றன. முதலில் பயின்று அதில் பழகி அதனை வழக்கமாகக் கொள்வதே நல்லொழுக்கமாகும். அதனால் மன உல்லாசத்திற்கென்றில்லாமல் இவற்றில் ஈடுபடுவது நல்லது.

# பூஜை - ஒரு விளக்கம்

தெய்வத்தை எல்லோரும் ஏதோ ஒரு வகையில் வழிபடுகிறோம். அது மனித இயல்பு. தெய்வம் தன்னைக் காட்டிலும் சிறந்தது, பெரிது, வலிமை மிக்கது, நெருக்கடியில் உதவுகிற அன்பும் பரிவும் அருளும் கொண்டது, நம் கோரிக்கைகளை ஏற்று விரும்பிய நன்மைகளைத் தரக் கூடியது, நன் மதிப்பிற்குரியது, நம் மூதாதையரால் தொடர்ந்து வழிபட்டு வந்தது என்று தொன்று தொட்டுவந்த பழக்கமும் வழக்கமும் காரணமாகத் தெய்வத்தை வழிபடுகிறோம்.

வழிபாட்டில் முதலிடம் பெறுவது துதிகளாகும். மொழியோ அமைப்போ தெய்வத்தை அணுக முக்கியமல்ல. தெய்வம் மொழிக்கும் அமைப்பிற்கும் அப்பாற்பட்டது. எனினும் வழிபாட்டிற்கு இன்றியமையாததான பக்தி நம்மிடம் ஆழ்ந்து பரவி இன்னமும் இடம் பெறவில்லை. நம் மொழியும் வழியும் கொண்டு தெய்வத்தை வழிபடத் தொடங்கும் போது, அது மேலெழுந்த வாரியாகத் தானிருக்கும். ஆழ்ந்து பதிந்த உள்ளத்துடன் அது வெளிவராது. அதனால் பெரும்பாலும் நாம் நமக்காகத் தெய்வத்தை வேண்டும் போது நம் மூதாதையர் பின் பற்றிய வழி முறையையே பின் பற்றுகிறோம். தெய்வத்திற்கு வடிவும், நிலையும், தோற்றமும் கிடையாதென நம்பினாலும், குலதெய்வம், இஷ்ட தெய்வம் என நம் முன்னோர் கொண்டதையே ஏற்கிறோம். ஸ்ரீ சங்கர பகவத் பாதர் முதலிய சான்றோர் இயற்றிய துதிகளையோ வேதமும் புராணமும் தருகிற துதிகளையோ பயன்படுத்துகிறோம். பூஜைக்குரிய உள்ளக்கசிவும் நெகிழ்தலும் இல்லாதவனும் அவற்றைக் கூறும் போது, சிறிது சிறிதாக உள்ளம் கசிய, இனிக்க இனிக்க, நெஞ்சம் தழக்கத் தழக்கப் பாடும் போது, அவை இறைவனுக்கு ஏற்புடையதாவதில் அதிசயமில்லை. பாலனும் பாமரனும் கூட இந்தத் துதிகளால் துதிக்க முடியும். இதுவே முழுப் பூஜையின் பலனையும் தரும்.

பூஜை இருவகைப்படும். வழிபாட்டுக்குரிய பொருள் அனைத்தும் பெற்றுப் பற்பல உபசாரங்களைச் செய்வது பாஹ்ய பூஜை எனும் வெளிப் படையான முறை. உள்ளுணர்வில் இறைவன் தன்னருகில் தனது வழிபாட்டினை ஏற்க வந்துள்ளதாக உணர்ந்து உள்ளுணர்வால் தான் அந்தந்த உபசாரங்களைச் செய்வது மானஸ பூஜை. மானஸ பூஜை சிறந்ததெனினும் எளிதில் கை கூடாதது. அதனால் வெளிப் பொருளை எதிர் பாராமல் மனத்தால் உருவாக்கிய பொருளைக் கொண்டு மனத்தால் பூஜை செய்வதாக வாயால் துதிப்பதில் இது நிறைவுறும். அதனால் இதனை வாசிக பூஜை எனலாம். ஸ்ரீ சங்கர பகவத் பாதர் முதலானோர் இதற்கு உதவும் வகையில் மானஸ பூஜை ஸ்தோத்திரங்களைத் தொகுத்துத் தந்துள்ளார்கள். இவற்றை மனனம் செய்து கொண்டே, துதிகள் மூலம் மானஸ பூஜை செய்து பழகலாம்.

இறைவன் மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாதவர். செயலால் அவரை வழிப்படுத்தவோ அவரது வழிபடவோ இயலாது. எங்கும் எல்லா மாகவும் ஏதாகவும் எப்போதும் இருப்பவரை குறிப்பிட்ட வடிவில் குறிப்பிட்ட நேரத்தில் கண்டு வழிபடுகிறோம். நம் முன்னோர் இவ்வாறு கண்டு இறையனுபவம் பெற்றுள்ளனர்.

நம் முன்னோர்கள் வடிவற்றவரை ஒளியும் ஒலியுமாகக் கண்டனர். தீப ஒளியிலும் வேள்வித்தீயிலும் கலச நீரிலும் வழிபட்டனர். இறைவன் அவற்றில் கருணையால் காட்டிய தோற்றத்தைத் தியான வடிவாக்கி அதை விக்கிரகமாக சித்திரமாக அமைத்து வழிபட்டனர். இன்றும் அம்முறைகள் அவ்வாறே பின் பற்றப்பட்டு இறையனுபவத்தைத் தருகின்றன.

இறைவனை வழிபடத் தொடங்கும் போது, அவரது மாட்சியையும் தன் சிறுமையையும் உணர்ந்து, மதம் பிடித்த யானையிடம் போல், எச்சரிக்கையும் பயமும் கலந்து அணுகுபவன், பின்னர் இறையனுபவம் மெள்ள மெள்ள ஏற்பட வியப்பும் மரியாதையும் கலந்து அரசனைப் போல் இறைவனை அலங்கரித்துத் தூர நின்று மகிழ்ச்சி பொங்கக்

கண்டு மகிழ்கிறான். நெருங்க நெருங்கப் பிரியமுள்ள அரிய விருந்தினரைப் போல் உபசரிக்கிறான். இன்னமும் நெருக்கம் பெறத் தன்னையே அவரிடம் அர்ப்பணித்து ஆட்பட்டு விடுகிறான். இது பக்தியுடன் பூஜை தருகிற நெருக்கம். இது தன் ஸந்ததியினரிடம் பரவும்படி செய்ய, குலமும் இவ்வழியில் முன்னேறுகிறது.

பூஜை சில உபசாரங்களாக விரிகிறது. இது 64 வகை, 16 வகை என்றெல்லாம் விரியும். இவற்றில் கந்தம் புஷ்பம் தூபம் தீபம் நைவேத்யம் என்ற ஐந்து முக்கியம். இறைவன் நமக்கு வாழ்க்கை நிறைவுறத் தந்த ஸாதனங்களை அவருக்கு முதலில் அளித்துப்பின் அவரது அருள் பெற்ற அச்சாதனங்களை நமது வாழ்விற்காகப் பயன்படுத்துவதே நம் வாழ்வில் தெய்விகம் நிரம்ப வழியாகும். நமது உடலும் பொறிகளும் உள்ளமும் நம் வாழ்க்கைக்குப் பயன்படுகிற உணவு உடை இருப்பிடம் முதலானவையும் ஐம்பூதங்களாலானவை. ஆகாயம் விரிவிற்கும் வளர்ச்சிக்கும் இடம் தருகிறது. மலர்வதற்கு இந்த விரிவைப் பயன்படுத்திக் கொள்கிற மலர் ஆகாயத்தின் பிரதிநிதி. விரிவிற்கேற்பக் குறுக்கிலும் நெடுக்கிலும் பரப்புவது வாயு. மலரின் மணத்தைப் பரப்புவது வாயு. அதன் அடையாளம் தூபம். மணமாவது பூமி. அதன் அடையாளம் சந்தனம் (கந்தம்). மேல் நோக்கிச் செல்வதும் ஒளியும் அக்நியின் சிறப்பு. தீபம் அதன் அடையாளம். கீழ் நோக்கிச் செல்வதும் நிரப்புவதும் ஜலத்தின் சிறப்பு, அதன் அடையாளப் பொருள் நைவேத்யம். இவற்றை கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம் என்ற முறையில் இறைவன் தந்ததை இறைவனிடம் ஸமர்ப்பிப்பதாகக் காட்டுவது இந்த ஐந்து உபசாரங்கள் எனப்படுகின்றன. இவற்றின் விரிவே 16 உபசாரங்கள், ராஜோபசாரங்கள், தேவோபசாரங்கள் எனப்படுபவை. அதிகம் வழக்கிலுள்ள சில உபசாரங்களை இங்கு காண்போம்.

1. **தியானம் -ஆவாஹனம்** — வழிபாட்டிற்கென வெளியில் அமைத்துக் கொண்ட விக்ரகம் சித்திரம் முதலியவற்றில் தெய்வ சைதன்யம் நிரம்பியிருக்க வேண்டும். பல தலைமுறைகளாகக் கோவில்களிலும், வீடுகளிலும்

வழிபட்டுவந்தவற்றில் தெய்வ சைதன்யம் எப்போதும் நிரம்பியிருக்கும். வழிபடுபவனின் உள்ளத்தினுள் அந்த சைதன்யம் துலங்கினால்தான் வழிபாட்டில் தெய்வீகம் துலங்கும். அதனால் தெய்வத்தின் அருளுருவத்தையும் குணச்சிறப்பையும் ஆழ்மனத்தில் பதிப்பதே தியானமாகும். தொடர்ந்த பயிற்சியால் உள்ளத்தினுள் தெய்வத்திரு உருவம் தோன்றும். அதனை உணர்ந்து, இதய கமலத்தின் நடுவில் கொணர்ந்து, அவரை வெளியே வரக் கோரி மூச்சால் வெளிப்படுத்தி, அவரது வழிபாட்டிற்கென வெளியே அமைந்துள்ள விக்கிரகம் முதலியவற்றில் வந்த மரும்படி வேண்டுகிறோம். இதுவே ஆவாஹனமாகும்.

**பாத்தியம் - அர்க்கியம் - ஆசமனீயம்** — நமது அழைப்பிற் கிணங்க நம்மருகே வந்துள்ள இறைவனது திருவடிகளை அலம்பித் துடைத்து விடுதல் பாத்தியமாகும். நமது அர்பணத்தை ஏற்க அவரது திருக்கைகளையும் அலம்பித் துடைப்பது அர்க்கியமாகும். வாயை அலம்ப நீர் வார்த்து முகத்தைத் துடைப்பது ஆசமநீயம். கலச நீரில் உத்தரணியளவு எடுத்து இவற்றிற்கான பாவனையுடன் அருகிலுள்ள கிண்ணத்தில் விடுவர்.

**மதுபர்கம்** :— தயிர், நெய், தேன், சர்க்கரை இவையாலான த்ரவம் மதுபர்கம். இறைவனுக்குத் தருகிற பானம் இது. தேனும் நெய்யும் பாலும், அல்லது தேனும் பாலும் கலந்து தருவதும் உண்டு.

**ஸ்னானம், வஸ்த்ரம், கந்தம், அக்ஷதை** :— சந்தனத் தைலம் முதலிய நறுமணமிக்க எண்ணெய் தேய்த்து, மஞ்சள் பொடி, அரிசிமா, ஸுகந்திப் பொடி முதலியவற்றால் அழுக்கு நீக்குதல், வாழைப் பழம் திராக்ஷை, பேரீச்சை, தேன் சர்க்கரை சேர்ந்த பஞ்சாம்ருதம், நெய், பால், தயிர், தேன், கருப்பஞ் சாறு, (பழச் சாறு) இளநீர், சந்தனக் குழம்பு, கங்கை முதலிய புண்ணிய நதிநீர், ஸ்ரீருத்ரம், புருஷஸூக்தம், ஸ்ரீஸூக்தம் முதலிய அந்தந்த தேவதைக் குரிய வேத மந்த்ரங்கள் ஜபித்து மந்திர சக்தி ஊட்டப் பெற்ற புனித நீர், இவற்றால் நீராட்டுவர். வேத மந்திரம் உபதேசிக்கப் பெறாதவர்

காயத்திரீ மந்திரம், ஸ்தோத்திரம் சொல்லியும் வேத மறிந்தவர் வேத மந்திரங்கள் சொல்லியும் நீராட்டுவர். நீராட்டியதும் துடைத்து வஸ்திரம் தரிக்கச் செய்து, நெற்றியில் சந்தனம் குங்குமமிட்டு அக்ஷதையைச் சேர்ப்பர்.

பூமாலை அணிவித்து பூக்களால் அர்ச்சனை செய்வது **புஷ்ப ஸமர்பணம்.** தசாங்கம், ஊதுவத்தி முதலியவற்றின் நறுமணப் புகை காட்டுவது **தூபம்.** நெய் தீபம் காட்டி வழிபடுவது **தீபம்.** நாம் அருந்துகிற உணவை இறைவனுக்கு இட்டு வழிபடுவது **நைவேத்யம்.** இதனையடுத்து கைகால்களை அலம்பச் செய்து ஆசமனம் செய்வித்து **தாம்பூலம்** அளிப்பர். தீபம் நாம் அவரை முழுவதும் கண்டு களிப்பதற்காக. **கர்பூர நீராஜனம்** அவரது அருள் நோக்கு நம் மீது பட்டு, நம் தீவினைகள் சுட்டெரிக்கப்பட்டு மங்களங்கள் பெருகுவதற்காக. இதனை அடுத்துத் துதிகளைச் சொல்லி, வலம் வந்து வணங்குவது **பிரதக்ஷிணமும் நமஸ்காரமும்.** வெண்குடை **(சத்திரம்)** வீசுவது, பாடுவது முதலிய உபசாரங்களும் செய்வது உண்டு.

பூஜை முடிந்ததும் அவரைத் திரும்ப இதயத்தினுள் குடிபுகச் செய்வது, **ஹ்ருதயாவஸ்தாபனம்.** பிள்ளையார் சதுர்த்திபோல் குறித்த நேரத்திற்கு மட்டுமான பூஜையாயிருந்தால் மறுபடி பூஜை (புன: பூஜை) செய்து யதாஸ்தானம் ப்ரதிஷ்டாபனம் என்ற மறுபடி அவர் நம் பூஜையை ஏற்று, அருள் புரிந்து, தம் இருப்பிடம் திரும்பிச் செல்வதை உணர்வோம்.

இதுவே எல்லா பூஜை முறைகளின் உட்கருத்து.

**பூஜை நியமங்கள் :-** உடலும் உள்ளமும் வழிபடுகிற தெய்வத்துடன் ஒன்றிப் போவது பூஜையின் குறிக்கோள். கிழக்கு அல்லது வடக்கு நோக்கி அமர்ந்து பூஜை செய்ய வேண்டும். தனது இடது புறத்தில் வழிபடுகிற தெய்வம். தனக்கு முன்புறம் பூஜைக் குரிய ஸாதனங்கள். பூஜைக்கு முன் நீராடித் தூய ஆடை உடுத்தி நெற்றியில் தன் முன்னோர் வழக்கப்படி விபூதி முதலியதைத் தரித்து ஸந்த்யா வந்தனம்

முதலிய நித்தியப் பணிகளை முடித்த பின் பூஜைக்கு அமர வேண்டும்.

நீராடுகிற நீரில் கங்கை, யமுனை, காவிரி முதலிய புனித நதிகளின் நீர் கலந்துள்ளதாகவும், கெட்ட செயலும், கெட்டஎண்ணமும் கெட்ட பேச்சும் விலக, பாபம்விலக தூய்மை பெற நீரில் உள்ள தெய்வ சக்தி உதவக் கோரி, அவை உதவுவதாக உணர்ந்து நீராட வேண்டும். விபூதி முதலியவை தரிக்கும் போதும் அவற்றிலுள்ள தூய்மை தருகிற தெய்வ சக்தி தன்னைப் புனிதப் படுத்தக் கோரி இடுவதும், புனிதம் தம் முள் பரவுவதாக உணர்வதும் அவசியம்.

பூஜைக்கு அமர்ந்ததும் தம் முன் உள்ள தீமை விலகி தூய்மை நிலவ குருவருளையும், தெய்வத்தின் அருளையும் கோரியும் விநாயகரை விக்னம் விலக்கக் கோரியும் (சுக்லாம் பரதரம்) ப்ராணாயாமம் செய்து செய்கிற பணியில் கவனம் சிதறாத சித்த நிலை வேண்டி பாபம் நீங்கி உள்ளம் தெளிந்து பரமேசுவரனின் ப்ரீதிக்காக அந்தந்த தெய்வ வழிபாடு செய்வதாக ஸங்கல்பம் செய்வர்.

விநாயக சதுர்த்தி முதலிய விசேஷ நாட்களைத் தவிர மற்ற நாட்களில் தினமும் குலதெய்வத்தையும் இஷ்ட தெய்வத்தையும் வழிபடுவர். பொதுவாக பஞ்சாயதன பூஜை செய்வது பெரியோர்களின் வழக்கம். தனித்தொரு தேவதையைச் சிலர் வழிபடுவர். பூஜைக்குரிய பொருள்களில் மணி, கலசம், சங்கு, தீபம், பூஜை செய்பவனுக்கான ஆஸனம், தெய்வ வழிபாட்டிற்கான பாத்திரங்கள், அக்ஷதை, சந்தனம், குங்குமம், கலச நீர், பஞ்ச பாத்திரம், உத்தரணி முதலியவற்றை அதனதனிடத்தில் அமைத்துக் கொள்ள வேண்டும்.

ஆஸனத்திற்கு மான்தோல் ஜ்ஞானம் தரும். புலித் தோல் முக்தி தரும். கம்பிளி துயர் நீக்கும். பலகை அமைதி தரும். ஆஸனத்தின் மீது பருத்தியாலான வஸ்திரம் இடுவது அமர்வதில் இதம் தரும். ஸூர்யனுக்குப் பில்வமும் விஷ்ணுவிற்கு முல்லையும், கணேசருக்குத் துளசியும்,

சிவனுக்குத் தாழம்பூவும், துர்க்கை அருகம் புல்லும், விஷ்ணுவிற்கு அக்ஷதையும் தவிர்க்கத் தக்கதென்பர். தனித்தொரு தேவதைக்கு பூஜை செய்யும் போது மட்டும் இந்த நியமம். எல்லாதேவதைகளையும் சேர்த்துப் பூஜிக்கும்போதும், மற்றும் பல மலர்களுடன் சேர்த்து அர்ப்பணம் செய்யும் போதும் இந்த நியமமில்லை. வில்வத்திற்கும், துளசிக்கும் நிர்மாலிய தோஷம் இல்லை. நீர் தெளித்து மறுபடி பூஜையில் உபயோகிக்கலாம். புஷ்பத்தைக் காம்பு கீழாகவும் மலர்ப் பகுதி மேலாகவும் இருக்கும்படி சாற்றுவர். வில்வ இலையை உட்புறம் இறைவனின் மீது படும்படி போடுவர். புஷ்பாஞ்ஜலியாகப் போடும்போது எப்படியேனும் இருக்கலாம்.

நேற்றுப் பறித்தது, காய்ந்தது, மணம் குன்றியது, பூச்சி அரித்தது, மலராமல் மொட்டாக இருப்பது, இடுப்பில் சுற்றிய ஆடையில் கட்டிக் கொணர்ந்தது, இடுப்புக்குக் கீழ் உள்ள பகுதியில் பட்டது, இலையின் பின்புறம் வைத்தது, பில்வமும் துளசியும் தவிர, பூஜையில் முன்னதாகப் பயன்படுத்தியது, இவை வழிபாட்டிற்கேற்றதல்ல. வாழை நாரில் கட்டிய மாலையே சிறந்தது. நூலில் கட்டிய பூவில் நூலின் சேர்க்கையால் தூய்மை குறையும்.

பூவை நடுவிரலுக்கும், மோதிர விரலுக்கும் நடுவே எடுத்து அர்பணம் செய்வர். நிர்மாலியத்தைக் கட்டை விரலும், ஆட்காட்டி விரலும் சேர்த்து எடுத்து அகற்றுவர்.

செம்பகம், தாமரை, மல்லி, ஜாதி, சாமந்தி, நீல அல்லி, செம்பரத்தை, செம்பருத்தி, மந்தாரை இவை எல்லா பூஜையிலும் ஏற்றவை. ஸ்ரீ கணபதி, சிவபெருமான், லக்ஷ்மி அம்பாள் இவர்களுக்கு வில்வமும், விஷ்ணுவிற்குத் துளஸியும் நல்லது. தனித்து கணபதிக்குப் பூஜையில் அருகம்புல், வெள்ளருக்கு, மந்தாரை வன்னி இது நல்லது.

முனை முறியாத - புண்படாத அரிசியே அக்ஷதை. நெல்லிலிருந்து அரிசி உடையாமல் உமி உரித்து எடுப்பர். குங்குமப்பூ குங்குமம், மஞ்சள் குழம்பு, இவற்றில் ஏதேனும்

ஒன்றைப் பூசிப் பூஜைக்குப் பயன்படுத்துவர். ஒன்றும் பூசாமல் நீரில் அலம்பி எடுத்த அக்ஷதை பித்ரு கர்மங்களில் மட்டும் பயன்படும்.

தீபம் இறைவன் மீது ஒளிவீசவும், உபசாரத்திற்கான தீபம் நீராஜனம் முதலியவற்றை ஏற்றவும் இறைவனின் முன்புறத்தில் வைப்பர். தீபத்திலேயே இறைவனை-இறைவியை ஆவாஹனம் செய்து வழிபடுவதுண்டு. அந்த தீபத்தைக் கிழக்கு முகமாக வைத்து அலங்கரிப்பர். தீப பூஜையில் தீபம் முதலியவற்றை ஏற்ற வேறொரு தீபம் வைப்பர். பூஜையிலுள்ள தீபத்தில் தீபம் முதலியவை ஏற்றுவதில்லை. ஒன்றுக்கு மேற்பட்டால் இரட்டைப் படையாக வைப்பர். பூமியில் வைக்காமல் தீபத்தின் கீழ் பலகை முதலிய ஆஸனம் தருவர்.

பொதுவாக தீபத்தின் முகம் கிழக்கு அல்லது வடக்கு நோக்கும்படி வைப்பர். கிழக்கு முகமாக அமர்ந்து தீப பூஜை செய்தால் மேற்கு முகமாகவும் தீபம் வைப்பர். தெற்கு முகமாக தீபம் வைப்பதில்லை. இறைவனுக்கு ஒளிதருவதற்கேற்ப மேற்கு முகமாகவும் வைப்பதுண்டு. தீபம் 1-3-5-7-9 என ஒற்றைப்படை முகம் கொண்டதாயிருக்கும். தேன் மெழுகின் நடுவே திரி வைத்துத் தீபம் வைப்பதுண்டு. இனமறியாத கொழுப்பு கலந்து செயற்கையாக அமைத்த மெழுகுவத்தி இறைவழிபாட்டிற்கேற்றதல்ல.

நெய்தீபத்தை இறைவனது வலப்புறத்திலும் எண்ணெய் தீபத்தை இடப்புறத்திலும் வைப்பர்.

உபசாரங்களுக்கான ஸாதனமும் பொருளும் தேடிப் பெற்றுப் பூஜை செய்வதால் மனம் நிறையும். பூவையும் அக்ஷதையும் கொண்டே பூஜையை நிறைவுறச் செய்வது மத்தியமமே. தூபார்த்தம் (தீபார்த்தம்) அக்ஷதான் ஸமர்பயாமி என்று தூப தீபங்களை அக்ஷதையால் ஈடு செய்வது சரியல்ல. தூபம் ஸமர்ப்பயாமி, தீபம் ஸமர்ப்பயாமி என்ற மானஸிக பாவனை கூட இந்நிலையில் சிறந்ததே.

விக்ரஹத்தின் மீது சாற்றப்பட்ட வஸ்த்ரமும், பூவும் தினமும் மாற்றத் தக்கவை. பட்டாடையானால். அழுக்காகாத வரை மூன்று மாதம் வரை சாற்றலாம். அழுக்காகிவிட்ட வஸ்திரம் உடன் அகற்றப்பட வேண்டும். நிவேதனத்திற்கானவை, ஆறிச் சில்லிடாமல், கைபொறுக்காத ஆவி பறக்கிற சூட்டிலுமில்லாமல், வெது வெதுப்புடன் பக்குவ உணவு நிவேதனத்திற்கு உரியது. நிவேதனமாகி ஆசமனமானதும் நிவேதனப் பொருள் உடன் அகற்றப்பட்டு தரை சுத்தமாக்கப் படவேண்டும். பலிக்காகச் சிறிது தனிக் கிண்ணத்தில் வைப்பர். அதனைப் பின் காக்கைக்கு இடுவதுடன் சேர்த்துவிடுவர்.

தினசரி பாஹ்ய பூஜையை விமர்சையாகச் செய்து பழகியவனே மானஸபூஜை செய்ய முடியும். மானஸ பூஜை செய்து பழகியவனே சைதன்யம் உணர்ந்து பாஹ்ய பூஜையில் ஈடுபடமுடியும். சூழ்நிலையில் பதட்டம் அதிகமிருந்தால் தியானித்துத் துதித்து வழிபடலாம். பூஜை பற்றி முழுதும் அறியாதவனும் பாலனும் கைகூப்பி வணங்கித் துதித்தே வழிபடலாம்.

புதிதான விக்கிரஹம் அல்லது சித்திரப் படமாயின் பிராணப் பிரதிஷ்டை செய்த பின் வழிபடுவர். தாற்காலிகமாக அமைத்த விக்ரஹமாயினும் பிராண பிரதிஷ்டை உண்டு. வெகு காலமாகப் பூஜை செய்து வருபவைக்கு இது அவசியமில்லை என்பர்.

வேதத்தை முறைப்படி ஓதியவர்களே வேத மந்திரங்களைக் கொண்டு வழிபடுவர். ஸ்வரம்-அக்ஷர உச்சரிப்பு இவற்றில் தவறு நேர்ந்தால் தோஷமுண்டு. வேத மந்திரங்களால் பூஜை செய்ய விரும்புபவர் முறைப்படி ஸ்வர சுத்தமும், அக்ஷர சுத்தமும் கெடாதபடி ஓதிப் பின் பயன்படுத்துவது ஏற்றது.

பூஜை தொடங்குமுன் அன்றைய வாரம், திதி நட்க்ஷத்திரம் முதலியவற்றைத் தெரிந்து கொண்டு ஸங்கல்பத்தில் சொல்வது முறை.

எந்தப் பணியைத் தொடங்கினாலும் விக்கினம் நேராதபடி காக்கிற விநாயகரை முதலில் வழிபடுவர். பூஜை துவங்கும் போது விநாயகரை வழிபடுதல் அவசியம். அது விநாயகருக்கே செய்வதாயினும் முதலில் விக்கின விநாயக பூஜை உண்டு. மஞ்சள் தூளில் நீர் சேர்த்து பிள்ளையார் பிடித்துப் பூஜை செய்வர். விநாயகர் பூஜை முடிந்ததும் ஸங்கல்பம் செய்ததும் இந்த விநாயகரை வழியனுப்பிவிட்டுப் பிரதான பூஜை செய்வர்.

மணி அடித்து பூஜைக்குக் குந்தகம் விளைவிக்கிற அஸுர சக்தியை வெளியேற்றி தெய்வ சக்தியைச் சுற்றிச் சூழ விடுவர். தீபத்தை வழிபட்டுப் பூஜை முடியும் வரை ஒளி தரும்படி வேண்டுவர். தூய நீரின்றிப் பூஜையில்லை. அதனால் கலச நீரில் கங்கை முதலான புனித நதிகளின் நீர் கலந்து அருள வேண்டி, அதனால் தன்னையும் பூஜைப் பொருளையும் நீர் தெளித்துத் தூயதாக்கிக் கொள்வர். சங்கு இறையம்சம் மிக்கது. அதில் நீர் வார்த்துப் பூஜை செய்து அந்நீரைக் கொண்டு தெளித்துத் தூய்மை உண்டாக்குவர். நித்ய பூஜையில் சங்கு அவசியம். நைமித்திக பூஜையில் சங்கில்லாமலும் பூஜை செய்வதுண்டு.

விநாயக பூஜை, ஸங்கல்பம், கண்டா (மணி) பூஜை, தீப பூஜை, கலச-சங்க பூஜை வரை பூர்வாங்க பூஜையாகும். எல்லா பூஜைகளிலும் இவை பொது வானவை.

பிரதான பூஜையில் ஆவாஹனமும், தியானமும் அந்தந்த இறைவடிவையொட்டி மாறும். ஆஸனம் பாத்யம் முதலானவற்றில் அதிக வேற்றுமைகள் இல்லை. புஷ்பத்தாலோ, குங்குமத்தாலோ அர்ச்சனை செய்ய உதவுகிற நாமாவளி மாறுபடும். மற்றவற்றை எளிதில் செய்யும் முறை முதலில் தரப்படுகிறது.

தானே பூஜிப்பது நல்லது. தன்னால் இயலும் போது, தனக்காகப் புத்திரன் முதலானோரைக் கொண்டு செய்வது மத்தியமம். இயலாவிடில் புத்திரர்களைக் கொண்டோ தக்ஷிணை தந்து பிறரைக் கொண்டோ நித்திய பூஜை தொடர்ந்து நடக்கும்படி செய்ய வேண்டும்.

## பொதுவான பூஜைமுறை

வழிபடுகிற இறைவனே விளித்து இந்தப் பூஜையை, இந்த உபசாரத்தை ஏற்றுக் கொள்வீர் என்று வேண்டி உபசாரங்களைச் செய்வது வழக்கம். வழிபடுவது பெண் தெய்வமானுல் தேவ என்பதை தேவேசி என்று மாற்றிச் சொல்வர். ஒவ்வொரு தேவதைக்கும் தனித்து பூஜைக்கான சுலோகங்கள் உண்டு. இயன்றவரை அவை பின் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. வேறுவிதமாக வழிபட விரும்புபவரும் அந்தந்த தேவதைக்கான வழிபாட்டு முறையறியாதவரும் இந்த சுலோகங்களைக் கொண்டு வழிபடலாம்.

பூஜைக்கான பொதுமுறை பின் வருமாறு–

அந்தந்த தேவதைக்கான ஸ்தோத்திரம் கூறி ஆவாஹனம் செய்யலாம். கணபதயே நம:, ஸுப்ரம்ஹண்ய ஸ்வாமிநே நம:, சிவாய நம:, தேவ்யை நம:, ஸ்ரீ மஹா விஷ்ணவே நம:, க்ருஷ்ணுய நம:, ராமாய நம:... என்ற இடத்தில் கூறி உபசாரங்களைச் செய்யலாம். உபசாரம் செய்வதற்குரிய ஸாதன மில்லாவிடில் அதைச் செய்வதான பாவனையுடன் உத்தரணி ஜலமோ பூவோ அக்ஷதையோ போடலாம். வேத மந்திரங்களை முறைப்படி ஓதியிருந்தால் உரிய மந்திரங்களை அந்தந்த உபசாரங்களில் சொல்லலாம். முன்னதாக ஸ்வரமும் எழுத்தும் பிசகாதபடி குருமுகமாக ஓதக் கற்ற பின்னரே சொல்வது தோஷமேற்படாமலிருக்க உதவும்.

பூஜை செய்யு முன் :— பஞ்சாங்கத்தைப் பார்த்து அன்று பூஜை தொடங்கும் வேளையின் வருஷம், அயனம், ருது, பக்ஷம், திதி, நக்ஷத்திரம், வாரம் இவற்றை அறிந்து புள்ளி வைத்துள்ள இடங்களில் இணைத்து ஸங்கல்பம் செய்ய வேண்டும். चित्रभानुवत्सरे दक्षिण अयने वर्ष ऋतौ सिंहमासे शुक्लपक्षे भानुवासरे हस्तनक्षत्रे तृतीयायां शुभतिथौ என்றவாறு காலக் குறிப்பு ஸங்கல்பத்தில் இடம் பெறும். வருஷப் பிறப்பு ஸங்க்ரமணம் அயன புண்ய காலம் முதலியவற்றில் திதி பற்றி पुण्यतिथौ என்று தர்ப்பணம் முதலியதைச் செய்பவர் குறிப்பிடுவர்.

ஸௌரமானத்தைப் பின்பற்றுபவராயின் मेष मासे, वृषभमासे, मिथुन मासे, कर्कटक मासे, सिंहमासे, कन्यामासे, तुलामासे, वृश्चिकमासे, धनुर्मासे, मकरमासे, कुम्भमासे, मीनमासे என்று ஸூர்யனிருக்கிற ராசியின் பெயரால் மாதப் பெயர் குறிப்பிடுவர். சாந்த்ரமானத்தைப் பின் பற்றுபவராயின் चैत्रमासे, वैशाखमासे, ज्येष्ठमासे, आषाढमासे, श्रावणमासे, भाद्रपदमासे, आश्वयुजमासे, कार्तिकमासे, मार्गशीर्षमासे, पुष्यमासे, माघमासे, फाल्गुनमासे எனக் குறிப்பிடுவர். அவரவர் வழிமுறையைப் பின் பற்றலாம்.

உபசாரங்களில் சில :-

1. ध्यानं த்யானம் :- தெய்வத்தை மனத்தினுள் உருவகப்படுத்துதல்.

2. आवाहनं ஆவாஹனம் :- மனத்தில் உருவானதை இதயத்திலிருந்து மூச்சு வழியே வெளிக் கொணர்ந்து விக்ரகம் முதலானதில் சேரும்படி கைலாக்கு கொடுத்து அழைத்து வருதல்.

3. पाद्यं பாத்யம் :- காலலம்ப நீர் வார்த்தல்.

4. अर्घ्यं அர்க்கியம் :- கையலம்ப நறுமணம் மிக்க நீர் வார்த்தல்.

5. आचमनीयं ஆசமனீயம் :- ஏலம் ஜாதிக்காய் முதலிய வற்றால் நறுணம் பெற்ற வாயலம்ப நீர் வார்த்தல், ஆசமனத்திற் கான நீர் ஆசமனீயம். வாயலம்புதல் ஆசமனம். நாம் பகவன் நாமங்களால் வாக்கும் உள்ளமும், சுத்தம் பெற ஆசமனம் செய்கிறோம். நீராடுதல், வஸ்த்ரம் உடுத்துதல், உபவீதம் தரித்தல், தூபம், தீபம், நைவேத்யம், நீராஜனம் முதலியவை செய்ததும் உடன் ஆசமன நீர் வார்ப்பர்.

6. मधुपर्कः மதுபர்கம் :- விருந்தினர் முதலானோருக்கு வந்தவுடன் களைப்பு நீங்கத் தயிரும் தேனும் அல்லது பாலும் தேனும் கலந்து தருதல்.

7. स्नानं ஸ்நாநம் :- நீராடுதல்.

8. वस्त्रधारणं வஸ்த்ர தாரணம் :- இடுப்பாடை, மேலாடை பெண் தெய்வமாயின் ரவிக்கை முதலியவை அளித்தல்.

9. उपवीतधारणं உபவீத தாரணம் :- பூணூல் தரிக்க அளித்தல், பெண் தெய்வத்திற்கும் இது உண்டு.

10. गन्धधारणं கந்த தாரணம் :- சந்தன மிடுதல், மேல் குங்குமமிடுதல்.

11. अक्षत समर्पणम् அக்ஷத ஸமர்ப்பணம் :- முனை முறியாத அரிசியை மஞ்சள் குழம்பில் பிசறி அளித்தல்.

12. पुष्पसमर्पणम् புஷ்ப ஸமர்ப்பணம் :- கழுத்து கேசங்கள் இவற்றைப் பூமாலைகளால் அலங்கரித்தல்.

13. नामावलिभिः अर्चना நாமாவளி அர்ச்சனை :- தெய்வத்தின் நாமங்களை நான்காம் விபக்தியில் நம: என்று இணைத்து அர்ச்சனை. ॐ அல்லது வேதப் ப்ரணவமான ॐ சேர்த்துச் சொல்வர். ॐ சேர்த்து எல்லோரும் கூறலாம். வேதம் கூறத் தகுதி பெற்றவர்மட்டுமே வேதப் பிரணவம் சேர்த்துக் கூறுவர்.

14. धूपः தூபம் :- நறுமணமுள்ள காரகில் சாம்பிராணி சந்தனத்தூள் முதலியவற்றை நெருப்புக் கனலில் தூவி சூழ் நிலையை நறுமணமடைய செய்தல்.

15. दीपः தீபம் :- மூன்று நூலிழைகளை இழைத்து திரி செய்து நெய்யில் நனைத்து ஏற்றித் தெய்வத்தைச் சுற்றி ஒளி காட்டுதல். தீபம் 1-3-5-7-9 என்றவாறு பலமுகங்கள் கொள்ளும்.

16. निवेदनं- नैवेद्यं நிவேதனம் :- தெய்வம் அளித்த உணவுப் பொருளை தெய்வ சக்தியால் பக்குவப்படுத்தித் தெய்வத்திற்கு அளித்தல். உணவளிக்கும் போது இடையே பருக நீரும், பாலும், தேனும் தருவர். வேத மந்த்ரத்தால், நீர் தெளித்து (புரோக்ஷணம்) சுற்றி நீர் வார்த்து (பரிஷேசனம்) தூய்மையைப் பாதுகாப்பர். உணவேற்கும்

போதும் பின்னும் சிறிது நீர் பருகச் செய்வர். (ஆபோசநம்-உத்தராபோசனம்) உணவேற்று விட்டதாக உணர்ந்ததும் கைகால்கள் அலம்பி ஆசமனம் செய்விப்பர்.

17. कर्पूरताम्बूलं கர்பூர தாம்பூலம் :- வெற்றிலை பாக்கு சுண்ணும்பு பச்சை கர்பூரம் முதலிய நறுமணப் பொருள் கலந்தது.

18. कर्पूर नीराजनं கர்பூர நீராஜனம் - சூடத்தாலான தீபம். பூஜை அளிப்பவன் செய்த குற்றம் குறை மன்னிக்கப் பெறவும் மங்களம் பெறவும் செய்வது.

19. प्रदक्षिणं ப்ரதக்ஷிணம் :- வலம் வருதல்.

20. नमस्काराः நமஸ்காரா: :- நமஸ்காரங்கள்.

21. मन्त्रपुष्पं மந்த்ர புஷ்பம் :- கைகள் நிறையப் பூ நிரப்பி அஞ்சலியாக தெய்வத்தின் மீது போடுதல்.

22. स्वर्ण पुष्पं ஸ்வர்ண புஷ்பம் :- தங்கம் வெள்ளி முதலிய வற்ருல் பூக்கள் செய்து தெய்வத்திற்கு அளித்தல்.

23. प्रार्थना ப்ரார்த்தனா :- ப்ரார்த்தனை.

இவை தொடர்ந்து வழிபாட்டிலுள்ள தெய்வத்திற்குச் செய்ய வேண்டியவை. புதிய பதுமை முதலானவற்றில் ஆவாஹனம் செய்ததும் ப்ராண சக்தி அவற்றில் நிலைத்திருக்கச் செய்தல் प्राणप्रतिष्ठा ப்ராண ப்ரதிஷ்டை ஆகும். மஞ்சள் பிள்ளையார்க்கு ப்ராண ப்ரதிஷ்டை தேவை இல்லை என்பர். அதனைச் செய்பவரும் உண்டு. தாற்காலிகமாக ஆவாஹனம் செய்ததை பூஜை முடிவில் उद्वासनं உத்வாஸனம் என்ற உபசாரத்தால் பதுமையிலிருந்து வெளியேற்றித் தன் இதயத்தினுள்ளோ, தெய்வத்தின் இருப்பிடத்திற்கோ செல்லச் செய்வர். यथास्थानं प्रतिष्ठापनं யதாஸ்தானம் ப்ரதிஷ்டாபனம் என இதற்குப் பெயர்.

குடை (छत्रं), சாமரம் (चामरं), ஆடுபல்லக்கு (आन्दोलिका), பாட்டு (गीतं), நடனம் (नृत्तं) முதலிய ராஜ உபசாரங்கள் பல உண்டு.

புஷ்பார்ச்சனையில் அங்க பூஜை என்றொரு முறை உண்டு. தெய்வத்தின் உருவ அழகைக் கூறுகிற நாமங்களைக் கொண்டு பாதாதி கேசம் வரை பூவால் அர்ச்சனை செய்வர். पादौ திருவடிகள், गुल्फौ கணுக்கால்கள். जङ्घे கணைக் கால்கள், जानुनी முழங்கால்கள், ऊरू தொடைகள், कटिः இடுப்பு, गुह्यं, उपस्थं, मेढ्रं ஆண்-பெண் மறைவிடம், नाभिः தொப்புள், उदरं வயிறு, पार्श्वौ விலாப்புறம், हृदयं இதயம், कण्ठं கழுத்து, वक्षः उरः மார்பு, स्तनौ ஸ்தனங்கள், स्कन्धौ தோள்கள், हस्ताः கைகள், बाहवः முன்னங்கைகள், पाणिः உள்ளங்கை, मणिबन्धः மணிக்கட்டு, अङ्गुलिः விரல், मुखं முகம், दन्ताः பற்கள், ओष्ठौ உதடுகள், अधरं கீழுதடு, कपोलौ கன்னங்கள், नेत्रे கண்கள், स्थूलोष्ठौ யானை முதலியதன் அகன்ற உதடு, गण्डः பிடரி கழுத்து, पृष्ठं முதுகு, शिरः தலை.

இலைகளும், பூக்களும், அருகம் புல்லும் பூஜையில் பயன்படுபவை. दूर्वा அருகம்புல், बिल्वदलं வில்வ இலை, माची पत्रं மாசி பத்திரி, बृहतीपत्रं கண்டங்கத் திரி இலை, धत्तूरपत्रं ஊமத்தை இலை, बदरी पत्रं இலந்தை இலை, अपामार्ग पत्रं நாயுருவி இலை, रसालपत्रं ஒட்டுமாவிலை, चूतपत्रं மாவிலை, करवीरपत्रं அரளி இலை, आमलक पत्रं நெல்லி இலை, मरुवकं மருக் கொழுந்து, गण्डाली வெள்ளெருக்கு, शमी-वह्निपत्रं வன்னி இலை, भृङ्गराजः கருசலாங்கண்ணி, अर्जुनपत्रं வெண் மருதிலை, अर्कपत्रं எருக்கிலை, दाडिमीपत्रं மாதுளை இலை, पुन्नागं புன்னை, वकुल पत्रं மகிழ இலை, अमृणालं வெட்டி வேர், द्रोणपत्रं தும்பை இலை. पाटली पत्रं பாதிரி இலை, केतकी தாழை, माधवी முல்லை, शम्याकं கொன்றை, कल्हारं செங்கழுநீர், सेवन्तिका செவந்தி, पारिजातं பவழ மல்லிகை, पद्मं தாமரை, श्वेतपद्मं வெண் தாமரை, उत्पलं அல்லி, कुमुदं ஆம்பல், जाती ஜாதிப்பூ.

நிவேதனங்களில் சில :— अन्नं - शाल्यन्नं சாதம், सूपं பருப்பு, लेह्यं நக்கிச் சாப்பிடக் கூடியது, भक्ष्यं பக்ஷணம், भोज्यं உணவாவது, चोष्यं உறுஞ்சிச் சாப்பிடுவது, खाद्यं கடித்துச்

சாப்பிடுவது - चर्व्यं மென்று சாப்பிடுவது पेयं பருகத்தக்கது, दधि தயிர், पयः क्षीरं பால், मधु தேன், पानीयं குடிநீர், अपूपं அப்பம், गुडापूपं வெல்ல அப்பம், मापापूपं வடை, लड्डुकं லட்டு, मोदकं கொழுக் கட்டை, शर्करान्नं சர்க்கரைப் பொங்கல், मुद्गान्नं வெண் பொங்கல், दध्योदनं தயிர் சாதம், जम्बीरान्नं எலுமிச்சம் பழச்சாதம், तिन्त्रिण्यन्नं புளியன்னம், क्षीरान्नं பாலன்னம், तक्रं மோர், नवनीतं வெண்ணெய், घृतं आज्यं நெய்.

## பூஜைக்குரிய சூழ் நிலை அமைப்பு

நன்கு மெழுகிக் கோலமிட்டு தெய்வத்தின் இடது புறத்தில் ஐந்து முகமுள்ள அழகிய விளக்கில் நல்லெண்ணெய் இட்டு பஞ்சாலான திரியிட்டுச் சுடரின்றி புகையின்றி மணிபோல் எரியவிட வேண்டும். கண்டாமணி, தூபக்கால் தீபக் கால், பூஜை நீர் வார்க்கிற கலசம், பஞ்சபாத்திரம், உத்தரணி, அர்க்கியம் முதலிய வற்றை ஏற்க ஒரு பாத்திரம், (பதத்க்ரஹம்) மஞ்சள் தூள், குங்குமம், அக்ஷதை (முனை முறியாத அரிசி, கையால் பலகையில் உருட்டித் தேய்த்து உமி அகற்றி முழு அரிசி) வாஸனைப் பொடி, சந்தனம் அரைத்த விழுது, பால், தயிர், வெல்லத்தூள், தேன், பூஜை நீரில் மணமேற்ற வாஸனைப் பொடி (ஏலம் கிராம்பு ஜாதிக்காய் ஜாதி பத்திரி இவற்றின் தூள்) கர்ப்பூரம், சாம்பிராணி அல்லது தூப சூர்ணம், அல்லது ஊது வத்தி, வெற்றிலை பாக்கு பழம் தேங்காய், காம்பு ஆய்ந்து, பூச்சி அரிக்காமல் அழுக்கு கேசம் முதலியது கலக்காதபடி துணியில் கொணராத - இடுப்பிற்குக் கீழ் கொணராத கால்படாத அன்றலர்ந்த பூ என்று தன் தன் நிலைக்கேற்றவாறு முன்னதாகவே மண்டபத்தில் வைக்க வேண்டும். பூஜை தொடங்கிய பின் கூடியவரை அவ்விடம் விட்டு எழுந்து செல்வதும், வேறு பணிகளில் ஈடுபடுவதும் முறையல்ல. தெய்வத்தைக் கிழக்கு முகமாக அமைத்துத் தான் வடக்கு முகமாக அமர்ந்து பூஜை செய்வது எந்நிலையிலும் ஏற்றது.

